79/1

உ
ஸ்ரீ ராமஜெயம்

# திருவேங்கடவன் மாலை

1. திருப்பள்ளி எழுச்சி
2. துதி. 3. திருவடித்துதி
4. மங்கள வாழ்த்து

ஸ்ரீ
வே ஸுப்ரபாதம்
ங் ஸ்தோத்ரம்
க ப்ரபத்தி
டே மங்களாசாஸனம்
ச





தமிழாக்கம்
ரா. பத்மநாபன்
10, முதல் தெரு,
அழகப்பாபுரம்,
காரைக்குடி-3.



‘அகல கில்லேன் இறையும்’என்று
அலர்மேல் மங்கை உறைமார்பா!
நிகரில் புகழாய்! உலகம்மூன்று
உடையாய்! என்னை ஆள்வானே!
நிகரில் அமரர், முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங் கடத்தானே!
புகல்ஒன்று இல்லா அடியேன்உன்
அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே.

— நம்மாழ்வார்.



ஸ்ரீ

# 1. ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம்



கௌஸல்யா ஸுப்ரஜா ராம!
பூர்வா ஸந்த்யா ப்ரவர்த்ததே
உத்திஷ்ட நரசார்தூல
கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம் 1

உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த
உத்திஷ்ட கருடத்வஜ
உத்திஷ்ட கமலாகாந்த
த்ரைலோக்யம் மங்களம் குரு. 2

மாதஸ் ஸமஸ்த ஜகதாம் மதுகைடபாரே:
வக்ஷோவிஹாரிணி மனோஹர திவ்யமூர்த்தே
ஸ்ரீஸ்வாமினி ச்ரிதஜன ப்ரியதான சீலே
ஸ்ரீவேங்கடேச தயிதே தவ ஸுப்ரபாதம். 3

தவஸுப்ரபாதம் அரவிந்த லோசனே
பவது ப்ரஸந்ந முகசந்த்ர மண்டலே
விதி சங்கரேந்த்ர வனிதாபிரர்ச்சிதே
வ்ருஷ சைலநாத தயிதே தயாநிதே. 4

# 1. திருவேங்கடவன் திருப்பள்ளி எழுச்சி

கோசலை நன்மக! குணமலி இராமா!
தேசுறு சந்தியை திகழ்ந்திடும் ஆங்கே;
மெய்யின் மெய்,பெறு மானுடர் ஏறே!
தெய்விக நியமம் செய்திடக் கண்விழி! 1

எழுகோ விந்தா! கருடத் துவச!
எழுவாய் கமலையின் இன்னுயிர்த் தலைவா!
அனைத்துல குக்கும் அளிப்பாய் நன்மை;
ஏழுமலை யானே! எம்பெரு மானே! 2

எல்லா உலகும் ஈன்றஎன் அன்னாய்!
பொல்லா மதுகை டபரைப் போக்கிய
மாயோன் மார்பில் மகிழ்வுறும் இறைவீ!
ஆயே! மனங்கவர் ஆர்எழில் உருவோய்!
அண்டினோர் வேட்பதை அருளிடும் சீலமே!
நல்திரு வேங்கட நாயகி! கண்விழி! 3

அரவிந்தக் கண்ணீ! அருளார் நிதியே!
பிரமன், சங்கரன், இந்திரன் பெண்டிர்
அருள்தரும் உன்னடி அருச்சனை செய்வார்;
திருப்புன் னகைதவழ் திருமதி முகத்தோய்!
திருமலை நாயகி! திருக்கண் மலர்க! 4

அத்ரயாதி ஸப்தருஷயஸ் ஸமுபாஸ்ய ஸந்த்யாம்
ஆகாசஸிந்துகமலாநி மநோஹராணி
ஆதாய பாதயுகம் அர்ச்சயிதும் ப்ரபந்நா:
சேஷாத்ரி சேகரவிபோ தவஸுப்ரபாதம். 5

பஞ்சாநநாப்ஜபவ ஷண்முக வாஸவாத்யா:
த்ரைவிக்ரமாதிசரிதம் விபுதாஸ் ஸ்துவந்தி
பாஷாபதி: படதி வாஸர சுத்திமாராத்
சேஷாத்ரி சேகரவிபோ தவ ஸுப்ரபாதம். 6

ஈஷத் ப்ரபுல்ல ஸரஸீருஹ நாரிகேள-
பூகத்ருமாதி ஸுமநோஹர பாலிகாநாம்
ஆவாதி மந்த மநிலஸ்ஸஹ திவ்யகந்தை:
சேஷாத்ரிசேகரவிபோ தவ ஸுப்ரபாதம். 7

உந்மீல்ய நேத்ரயுகம் உத்தமபஞ்ஜரஸ்தா:
பாத்ராவசிஷ்ட கதலீபல பாயஸாநி
புக்த்வா ஸலீல மத கேளிசுகா: படந்தி
சேஷாத்ரிசேகரவிபோ தவ ஸுப்ரபாதம். 8

அத்திரி முதலிய அரும்பெரும் தவமுடைச்
சத்தமா முனிவரும் சந்தியைத் துதித்து,
ஆகாய கங்கை அதனில் அலர்ந்து,
மாகம் எங்ஙணும் மணக்கும் தாமரை
மாமலர் ஏந்தியே, மகிழ்வுடன் போற்ற,
மாமகள் தலைவா! மண்டினர் இங்கே!
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 5

ஐம்முகன், அயன்முதல் அறுமுகன் இந்திரன்,
செம்மையாம் உன்தன் சேவடி அதனால்
உலகதை அளந்த உயர்புகழ் முதலா,
நலமருள் காதையை நாடியே பாடுரர்;
மொழிப்பதி வியாழனும் முகிழ்த்த மனத்தொடு
மொழிகிறன் தொலைவில், பஞ்சாங்க மொழிகளை
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 6

சிறிதே மலர்ந்த செவ்விய தாமரை
செறிமணம் கலந்து, தென்னை கமுகின்
பாளை நன் மணமும் பாங்காய்ப் பரப்பி,
வேளையே விரும்பும் மந்தமா ருதமும்
திருமலை தன்னில் தண்எனத் திகழ்தலின்,
திருமலை நாதா! திருக்கண் மலர்க! 7

ஆடற் கிளிகள் அழகிய கூண்டுள்
மூடிய கண்களை முழுதும் திறந்து,
கலத்தினில் எஞ்சிய கன்னல் அமுதினை,
பழத்துடன் உண்டு பரவும் உன்பெயர்;
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 8

தந்த்ரீ ப்ரகர்ஷ மதுர ஸ்வநயா விபஞ்ச்யா
காயத்யநந்த சரிதம் தவ நாரதோபி
பாஷாஸமக்ர மஸக்ருத் கரசார ரம்யம்
சேஷாத்ரிசேகரவிபோ தவஸுப்ரபாதம். 9

ப்ருங்காவளீச மகரந்த ரஸாநுவித்த-
ஜங்காரகீதநிநதைஸ் ஸஹஸேவநாய
நிர்யாத்யுபாந்தஸரஸீ கமலோதரேப்ய:
சேஷாத்ரிசேகரவிபோ தவஸுப்ரபாதம். 10

யோஷாகணேந வரதத்நி விமத்யமாநே
கோஷாலயேஷு ததிமந்தந தீவ்ரகோஷா:
ரோஷாத் கலிம் விதததே ககுபஸ்ச கும்பா:
சேஷாத்ரிசேகரவிபோ தவஸுப்ரபாதம். 11

பத்மேசமித்ரசதபத்ர கதாலிவர்கா:
ஹர்த்தும் ச்ரியம் குவலயஸ்ய நிஜாங்கலக்ஷ்ம்யா
பேரீநிநாதமிவ பிப்ரதி தீவ்ரநாதம்
சேஷாத்ரிசேகரவிபோ தவ ஸுப்ரபாதம். 12

இன்ஒலி எழுப்பும் ஏழிசைத் தந்தி
தன்னைக் கொண்ட தரமிகு விபஞ்சி
வீணையைத் தடவி விரல்விசை நாரதன்
இணைஇலா உன்தன் ஏற்றமார் சரிதையை
ஆழ்வார் முதலிகள் அருளிச் செயலினை
ஏழ்வரை எங்கும் இனிக்க இசைத்தான்;
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 9

அருகே உள்ள அரவிந்த ஓடையில்
மருவார் தாமரை மலரின் பொகுட்டில்
சுரும்பின் இனங்கள் சுவையார் தேனை
விரும்பி, மாந்தி நின்புகழ் முரலும்;
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 10

ஆயர் மங்கையர் அங்கை வருந்த,
தோயும் வெண்தயிர் துமியெழக் கடையும்
மத்தொலி தயிர்ஒலி மல்கி நிறைந்து
எத்திசை களிலும் எதிர்ஒலி செய்யும்;
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 11

கதிரவன் தோழியாம் கமல மலரினில்
வதியும் வண்டுகள் வண்கு வளைாதன்
கருநிற எழிலைக் காணப் பொறுது,
அரவணைத் துயிலும் அரியின் அழகிய
கருமை எமக்கே உரிமைஎன் கழறி
உரக்க முரலும், ஓவா முழக்கால்;
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 12

ஸ்ரீமந்அபீஷ்ட வரதாகில லோகபந்தோ
ஸ்ரீஸ்ரீநிவாஸ ஜகதேக தயைகஸிந்தோ
ஸ்ரீதேவதாக்ருஹபுஜாந்தர திவ்யமூர்த்தே
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம். 13

ஸ்ரீஸ்வாமிபுஷ்கரிணிகாப்லவ நிர்மலாங்கா:
ச்ரேயோர்த்திநோ ஹரவிரிஞ்சி ஸநந்தநாத்யா :
த்வாரே வஸந்தி வரவேத்ர ஹதோத்தமாங்கா :
ஸ்ரீவேங்கடாசலபதே தவஸுப்ரபாதம். 14

ஸ்ரீசேஷசைல கருடாசல வேங்கடாத்ரி
நாராயணாத்ரி வ்ருஷபாத்ரி வ்ருஷாத்ரி முக்யாம்
ஆக்யாம் த்வதீய வஸதே: அநிசம் வதந்தி
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம். 15

ஸேவாபரா : சிவஸுரேச க்ருசாநுதர்ம
ரக்ஷோம்புநாத பவமாந தநாதிநாதா :
பத்தாஞ்ஜலி ப்ரவிலஸந் நிஜசிர்ஷதேசா :
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம். 16

கோரும் வரமெலாம் கொடுக்கும் கோவே!
திருமகள் நேயா! திருவளர் செல்வா!
உலகோர் உறவே! ஒருதயைக் கடலே!
அலர்மேல் மங்கை அகலாது உறையும்
திருமணி மார்பா! திரண்ட தோளா!
உருவப் பேரெழில் உத்தம! தேவே!
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 13

கோபுர வாயில்,நின் குமரன், சிவனொடு
தாபத சனந்த சனாதனர் முதலோர்
மேலுறு நிலையை மீதுறல் வேண்டி,
ஏலவே இறைபுட் கரணியில் ஆடி,
உள்ளும் புறமும் உற்றனர் தூய்மை,
உள்ளம் உவப்ப உருகியே நிற்பரால்,
பெருமைசால் பிரம்பால் தைவரப் பெற்றே!
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 14

திருப்பதித் திருமலை, திருப்புள் மாமலை,
திருப்பணி மாமலை, திருவிடை மாமலை,
திருவேங் கடமலை திருநா ரணன்மலை
என்னும்நீ அமர் எழிலார் மலைகளை
இன்பமாய்ப் பரவி இசைப்பார் பத்தர்;
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 15

இந்திரன் அரனொடும் இயமன், நிருதி,
செந்தீ, காற்றொடு அளகை இறைவன்,
வருணன் ஆனோர் வந்தனர் விரும்பி; உன்
திருவடி புனையத் திருக்கை குவித்தார்;
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 16

தாமேஷு தே விஹகராஜ ம்ருகாதிராஜ
நாகாதிராஜ கஜராஜ ஹயாதிராஜா:
ஸ்வஸ்வாதிகார மஹிமாதிகம் அர்த்தயந்தே
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம். 17

ஸூர்யேந்து பௌம புத வாக்பதி காவ்யஸௌரி
ஸ்வர்பாநு கேது திவிஷத் பரிஷத் ப்ரதாநா:
த்வத்தாஸதாஸ சரமாவதி தாஸதாஸா:
ஸ்ரீவேங்கடாசலபதே தவஸுப்ரபாதம். 18

த்வத்பாததூளிபரித ஸ்புரிதோத்தமாங்கா:
ஸ்வர்காபவர்க நிரபேக்ஷ நிஜாந்தரங்கா:
கல்பாகமாகலநயா ஆகுலதாம் லபந்தே
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் 19

த்வத்கோபுராக்ரசிகராணி நிரீக்ஷமாணா:
ஸ்வர்கர்பவர்கபதவீம் பரமாம் ச்ரயந்த:
மர்த்யா மநுஷ்யபுவநே மதிமாச்ரயந்தே
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம். 20

கருடன்,ஐ ராவதம் கான்முழைச் சிங்கம்
உருவார் உச்சைச் சிரவம், உரகமன்
மதிமிகும் அனந்தன் ஆதியோர், மன்அருட்
கதிதனைக் கண்டு, காமுற்று, அவரவர்
தந்தாம் நடைகளின் தாங்கள் மேம்படச்
சிந்தையிற் கொண்டே சேர்ந்தனர் கோயில்;
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 17

சுடரோன், சந்திரன், செவ்வாய், சூழ்புதன்
சுடரும் பொன்னொளித் தொல்புகழ் வியாழன்,
சுக்கிரன், சனி,மா சுண இரு கோள்கள்,
வக்கிரம் விடுத்துன் மாணடி யார்தம்
அடியர்க்கு அடியர் அடியர்தம் அடியராய்,
அடியரின் வழிவழி அடியவர் ஆகி,
திருமலை தன்னைத் தேடியே வந்தனர்;
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 18

ஒன்பது கோள்களும் உன்தன் திருவடிப்
பொன்அவிர் துகளதைப் போற்றித் தலைமிசை
தரித்தபின் மோட்சத் தகுதியும் வேண்டார்;
வரன்முறைக் கற்பம் வரும்என அஞ்சி,
திகைத்துன் கோயிலின் திருமுனம் அணைந்தார்;
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 19

விண்ணுலகு ஏகும் மானுடர் மேல்நிமிர்
விண்ணுயர்க் கோபுர வியன்முடி கண்டு,
புத்தேள் வாழ்வினைப் போற்றலம் என்றே,
இத்தரை மனிதராய் இவ்உல கத்தே
பிறந்திட, நின்னை வேண்டுவர் பெரிதே!
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 20

ஸ்ரீபூமிநாயக தயாதி குணாம்ருதாப்தே
தேவாதிதேவஜகதேக சரண்யமூர்த்தே
ஸ்ரீமந்அநந்த கருடாதிபி: அர்ச்சிதாங்க்ரே
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம். 21

ஸ்ரீபத்மநாப புருஷோத்தம வாஸுதேவ
வைகுண்ட மாதவ ஜநார்தந சக்ரபாணே
ஸ்ரீவத்ஸசிஹ்ந சரணாகத பாரிஜாத
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம். 22

கந்தர்ப்பதர்ப்பஹர ஸுந்தர திவ்ய மூர்த்தே
காந்தாகுசாம்புருஹகுட்மல லோலத்ருஷ்டே
கல்யாண நிர்மல குணாகர திவ்ய கீர்த்தே
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம். 23

மீநாக்ருதே கமடகோல ந்ருஸிம்ஹ வர்ணிந்
ஸ்வாமிந் பரச்வத தபோதந ராமசந்த்ர
சேஷாம்சராம யதுநந்தந கல்கிருப
ஸ்ரீவேங்கடாசலபதே தவஸுப்ரபாதம். 24

திருமகள், மண்மகள் கேள்வனே! திருவார்
கருணையே முதலிய குணங்கெழு கடலே!
உலகோர் அடையும் ஒருதனிப் புகலே!
கருடன், அனந்தன் கைதொழுது ஏத்தும்
திருவடி உடையாய்! தேவர்தம் தேவே!
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 21

பற்ப நாபா! பரபுரு டோத்தமா!
பொற்புடை வாசு தேவனும் புகழுடை
மாதவ! சனார்த்தன! மலர்க்கை ஆழியாய்!
மாதவர் மேவிடும் வைகுந்த பதியே!
திருமரு மார்பா! சரணவான் தருவே!
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 22

காமன் செருக்குஅழி கவின்உறு வடிவோய்!
காமர் எழிலுடைக் கமலையின் குய்யத்
தாமரை மொக்கில் தங்கிய கண்ணாய்!
மங்கல! நின்மல! மகிழ்குணக் குடிலாய்!
பொங்கிய இன்பப் புகழ்மிகு நிலையே!
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 23

மீனுடன் ஆமை மிகுகோல, நரசிங்கம்,
வானொடு மண்ணும் வாழ்த்திய வாமனா!
விண்ணொடு மண்ணும் விரிந்த விக்கிரம!
திண்ணிய பரசுத் தெறலுடை ராமா!
கானும் கடலும் கடந்தகா குத்தா!
ஆன்இடைக் குலம்வரும் அடல்பல ராமா!
கானும் மலையும் காலிமேய் கண்ணா!
ஊனுல கில்இனி உருவெடு கற்கீ!
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 24

ஏலாலவங்க கநஸார ஸுகந்தி தீர்த்தம்
திவ்யம் வியத்ஸரிதி ஹேமகடேஷு பூர்ணம்
த்ருத்வாத்ய வைதிகசிகாமணய: ப்ரஹ்ருஷ்டா:
திஷ்டந்தி வேங்கடபதே தவ ஸுப்ரபாதம். 25

பாஸ்வாநுதேதி விகசாநி ஸரோருஹாணி
ஸம்பூரயந்தி நிநதை: ககுபோ விஹங்கா:
ஸ்ரீவைஷ்ணவா: ஸததம் அர்த்தித மங்களாஸ்தே
தாமாச்ரயந்தி தவ வேங்கட ஸுப்ரபாதம். 26

ப்ரஹ்மாதயஸ் ஸுரவரா: ஸமஹர்ஷயஸ் தே
ஸந்தஸ் ஸநந்தநமுகா: தவ யோகிவர்யா:
தாமாந்திகே தவ ஹி மங்களவஸ்துஹஸ்தா:
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம். 27

லக்ஷ்மீநிவாஸ நிரவத்ய குணைகஸிந்தோ
ஸம்ஸாரஸாகர ஸமுத்தரணைகஸேதோ
வேதாந்தவேத்ய நிஜவைபவ பக்தபோக்ய
ஸ்ரீவேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம். 28

இத்தம் வ்ருஷாசலபதே: இஹ ஸுப்ரபாதம்
யே மாநவா: ப்ரதிதிநம் படிதும் ப்ரவ்ருத்தா:
தேஷாம் ப்ரபாதஸமயே ஸ்ம்ருதிரங்கபாஜாம்
ப்ரக்ஞாம் பரார்த்தஸுலபாம் பரமாம் ப்ரஸூதே
29

ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம் முற்றிற்று.

ஏலம், இலவங்கம், கற்பூரம் கலந்த
கோலவான் கங்கைக் குளிர்நீர் நிறைந்த
பொற்குடம் சுமந்து புண்ணிய அந்தணர்
நற்பொழுது இதுஎன நண்ணினர் மகிழ்ந்து,
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 25

கதிரவன் எழுந்தனன்; கமலங்கள் மலர்ந்த;
துதிசெயும் பறவைகள் துன்னியே இசைத்த;
இன்னிய ஒலிகளும் எண்திசை சேரும்;
இன்னிசைப் பல்லாண்டு எழுப்பிட வைணவர்
திருமலைத் தேவா! நின் தொழுது நிற்கின்றார்;
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 26

பிரமன் முதலாம் பெருந்தே வர்களும்
இருந்தவர் இருடியர் சாது சனந்தனர்
ஆதிய யோகியர் அனைவரும் அன்புடன்
பூசித சோபானப் பொருள்மிக ஏந்திநின்
திருமலைக் கோயிலின் திருமுன் அடைந்தனர்;
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 27

திருமகள் நிலையமே! தேவனே! மறுவிலி!
அருங்குணக் கடலே! அன்பர்க்கு இனியாய்!
மறைமுடி உணரும் மாண்பார் உட்பொருள்!
பிறவிப் பெருங் கடல் தாண்டுபேர் அணையே!
திருவேங் கடவா! திருக்கண் மலர்க! 28

வேங்கட நாதனை விழித்தெழுந் தருளப்
பாங்கார் பண்அமைப் பாடலை இவ்வணம்
நாளும் வைகறைப் பாடும்நல் அடியரை
மூளும் அன்பின் முனைப்பொடு மனத்தே
நினைபவர் பரமாம் நெடும்பதம் நல்கும்
நினைவுறு ஞானம் பெறுகுவர் நெடிதே. 29

திருப்பள்ளி எழுச்சி முற்றிற்று.

ஸ்ரீ

# 2 ஸ்ரீவேங்கடேச ஸ்தோத்ரம்

கமலா குச சூசுக குங்குமதோ
நியதாருணிதா துல நீலதநோ
கமலாயதலோசந லோகபதே
விஜயீபவ வேங்கடசைலபதே. 1

ஸசதுர்முக ஷண்முக பஞ்சமுக
ப்ரமுகாகில தைவதமௌளிமணே
சரணாகதவத்ஸல ஸாரநிதே
பரிபாலய மாம் வ்ருஷசைலபதே. 2

அதிவேலதயா தவ துர்விஷஹை:
அநுவேல க்ருதை: அபராதசதை:
பரிதம் த்வரிதம் வ்ருஷசைலபதே
பரயா க்ருபயா பரிபாஹி ஹரே. 3

அதிவேங்கடசைலமுதாரமதேர்
ஜநதாபிமதாதிகதாநரதாத்
பரதேவதயா கதிதாந் நிகமை:
கமலாதயிதாந் ந பரம் கலயே. 4

# 2. திருவேங்கடவன் துதி



கமலைக் குயமுனைக் குங்குமக் கலப்பால்
நிமலா! நின்கரு நிறமும் சிவக்கும்;
கமலக் கண்ணா! கார்நிற வண்ணா!
உலகின் இறையே! உத்தம! தேவே!
விமலா! வேங்கட நாதா! வெல்க! 1

நான்முகன், சண்முகன், நற்சிவன் ஆனோர்
தாம்முடி சூடும் தலைஅணி மணியே!
சரணம் அடைவோர் சால்புடை வைப்பே!
திருவேங் கடவா! திருஅருள் புரியே! 2

எண்ணில் அடங்கா எல்லையில் பிழைகள்
பண்ணியே நாளும் பழகிடல் ஆனேன்;
நீயும் பொறுக்க நினைந்திட அரிதால்!
ஆயினும் வேங்கட! அன்பால் அணைந்தேன்;
தாயினும் நல்லாய்! தண்ணளி தாராய்! 3

திருவேங் கடவா! திருமிகு வள்ளால்!
விரும்பும் பொருளினை மிகைதர வல்லாய்!
அருமறை புகலும் ஆழ்ந்த பொருளே!
விரைமல ராளின் விருப்பார் நேயா!
உரைசெயப் பரம்அது உன்னிலும் யாரே? 4

கலவேணுரவாவசகோபவதூ
சதகோடி வ்ருதாத் ஸ்மரகோடிஸமாத்
ப்ரதிவல்லவிகாபிமதாத் ஸுகதாத்
வஸுதேவஸுதாந் ந பரம் கலயே. 5

அபிராமகுணாகர தாசரதே
ஜகதேகதநுர்தர தீரமதே
ரகுநாயக ராம ரமேச விபோ
வரதோ பவ தேவ தயாஜலதே. 6

அவநீதநயா கமநீயகரம்
ரஜநீகரசாரு முகாம்புருஹம்
ரஜநீசரராஜ தமோமிஹிரம்
மஹநீயமஹம் ரகுராமமயே. 7

ஸுமுகம் ஸுஹ்ருதம் ஸுலபம் ஸுகதம்
ஸ்வநுஜஞ்ச ஸுகாயம் அமோகசரம்
அபஹாய ரகூத்வஹம் அந்யமஹம்
ந கதஞ்சந கஞ்சந ஜாது பஜே. 8

இன்குழல் இசைக்கும் இன்ஒலி மடுத்தே
தன்வயம் இழப்பர் தகவுடைக் கோபியர் ;
எண்ணில் கோடி இடைமகள் சூழினும்
கண்ணன் தனித்தனி களிஉரு ஆவான் ;
திண்ணிய வசுதே வன்திருச் செல்வன்
கண்ணனில் பரமாம் கடவுளை அறியேன்! 5

விழையும் நற்குண வியன்பெரு நிலய!
பிழைஇல் தயரதன் பெருமிதப் பேறே!
உலகெலாம் ஒப்பில் உயர்தனுச் செல்வ!
இலகுஉளம் மாருது இணைந்திடு தீர!
இரகுவழித் தலைவா! இராமனே! எங்கும்
பரந்திடு பொருளே! பண்பு அருட் கடலே!
திருவின் கேள்வா! திருவரம் தருவாய்! 6

நிலமா மகள்-மகள் நேயக் கையான் ;
நிலவொடு தாமரை நேர்முகம் உடையான் ;
இராவண இருளை அழித்திடும் கதிரோன் ;
பராவரும் இராமனைப் பணிந்தேன் பாங்குற. 7

இன்முகன்! நன்மனன்! எளியவர் நேயன்!
இன்புறும் முத்தி இரங்கி அளிப்போன் ;
நிகர்சால் தம்பியன் ; நிகரில் எழிலான் ;
வீணில் செல்லா விசையார் கணையன்!
பூணேன் இராமனின் பொன்னடி அல்லால். 8

விநா வேங்கடேசம் ந நாதோ ந நாத:
ஸதா வேங்கடேசம் ஸ்மராமி ஸ்மராமி
ஹரே வேங்கடேச ப்ரஸீத ப்ரஸீத
ப்ரியம் வேங்கடேச ப்ரயச்ச ப்ரயச்ச. 9

அஹம் தூரதஸ்தே பதாம்போஜயுக்ம
ப்ரணாமேச்சயாகத்ய ஸேவாம் கரோமி
ஸக்ருத்ஸேவயா நித்யஸேவாபலம்த்வம்
ப்ரயச்ச ப்ரயச்ச ப்ரபோ வேங்கடேச. 10

அஜ்ஞாநிநா மயா தோஷாந்
அசேஷாந் விஹிதாந் ஹரே
க்ஷமஸ்வ த்வம் க்ஷமஸ்வத்வம்
சேஷசைலசிகாமணே. 11

ஸ்ரீ வேங்கடேச ஸ்தோத்ரம் முற்றிற்று.

வேங்கட நாதனின் வேறொரு தெய்வம்
பாங்குடன் அறியோம் பாருல கதனில்;
வேங்கட நாதனை விரும்பிய மனத்தேன்;
வேங்கட நாத! மேல்அருள் வழங்கே!
வேங்கட நாத! விரும்பும் வரமளி. 9

திருவடித் தாமரை சேவித்து நின்றேன்;
விருப்பாய் சேய்மை வியன்வழி வந்தே;
ஒருமுறை உன்தன் காட்சி காணின்
திருவடி தன்னைத் தினமும் காணும்
அரிதினும் அரிதாம் ஆக்கம் கூடும்
அருளினை ஈந்தே, ஆட்கொள்! ஆட்கொள்! 10

அரியே! வேங்கட மலையின் அணியே!
புரியேன் புரிந்த பொல்லாச் செயலினை
உன்னுவது அரிதே! உன்தன் நல்லருள்
உன்னியே வந்தேன்; உன்முகம் காட்டி,
மன்னித்து அருள்வாய்! மலைமுடி மணியே! 11

ஸ்ரீ

# ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி

ஈசாநாம் ஜகதோஸ்ய வேங்கடபதே:
விஷ்ணோ: பராம் ப்ரேயஸீம்
தத்வக்ஷஸ்தல நித்யவாஸரஸிகாம்
தத்க்ஷாந்தி ஸம்வர்த்தநீம்
பத்மாலாங்க்ருத பாணிபல்லவ யுகாம்
பத்மாஸநஸ்தாம் ச்ரியம்
வாத்ஸல்யாதிகுணோஜ்ஜ்வலாம்
பகவதீம் வந்தே ஜகந்மாதரம். 1

ஸ்ரீமந் க்ருபாஜலநிதே க்ருதஸர்வலோக
ஸர்வஜ்ஞ சக்த நதவத்ஸல ஸர்வசேஷிந்
ஸ்வாமிந் ஸுசீல ஸுலபாச்ரித பாரிஜாத
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 2

# 3. திருவேங்கடவன் திருவடித்துதி

அனைத்துலகும்அளி அன்புடைத் தலைவி!
கனைகுரல் அருவிக் கவின்மலை சேரும்
வேங்கட நாதன் வேட்புறு மனையோய்!
பாங்காய் அவனுடைப் படர்ஒளி மார்பில்,
'அகலகில் லேன்' என அன்பால் உறைவோய்!
அகலாது அவனின் அருங்கமை வளர்ப்போய்!
தாமரை மலர்அணித் தளிர்முன் கையோய்!
தாமரை மலர்மிசைத் தவிசுடைத் திருவே!
அன்பு முதலாம் அருங்குண ஒளியே!
அன்பார் பகவதி! அவனியின் அன்னாய்!
உன்பதம் தொழுதேன்; உயர்நலத் திருவே! 1

கமலை நாதா! கருணைமாக் கடலே!
விமலா! உலகின் விளக்கம் ஆவாய்!
எல்லாம் அறிவோய்! யாதும் வல்லோய்!
எல்லாச் செயலின் ஈறும் பயனே!
எளியோர் அன்பே! எளிமைத் தலைவா!
அளிவான் தருவே, அண்டினவர்க்கு;
திருவேங் கடவா! திருவடி சரணம். 2

ஆநூபுரார்ப்பித ஸுஜாத ஸுகந்தி புஷ்ப-
ஸௌரப்ய ஸௌரபகரௌ ஸமஸந்நிவேஸௌ
ஸௌம்யௌ ஸதாநுபவநேபி நவாநுபாவ்யௌ
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 3

ஸத்யோவிகாஸி ஸமுதித்வர ஸாந்த்ரராக-
ஸௌரப்ய நிர்பரஸரோருஹ ஸாம்யவார்த்தாம்
ஸம்யக்ஷு ஸாஹஸபதேஷு விலேகயந்தௌ
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 4

ரேகாமயத்வஜ ஸுதா கலசாதபத்ர
வஜ்ராங்குசாம்புருஹ கல்பக சங்கசக்ரை:
பவ்யைரலங்க்ருததலௌ பரதத்வசிஹ்நை:
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 5

திருவா! உன்தன் திருவடிச் சிலம்பை,
மருவார் மலரால் மறைத்திட் டாலும்,
திருவடி மணமே திறமதில் விஞ்சும்;
திருவார் மென்மைத் திருவடிக் காட்சி,
எப்பொழு தும்மே இன்பம் ஆயினும்,
அப்பொழு தப்பொழுது இன்பம் புதிதால்!
திருவேங் கடவா! திருவடி சரணம். 3

அப்பொழுது அலர்ந்தே அழகுற விரியும்
செப்பரும் தாமரைச் செவ்வியை, உலகோர்
உன்னுடை எழிலார் இணைஅடி ஒக்கும்
என்னவே கூறி ஏத்திடும் உவமை,
கட்டுரை அல்ல! புல்லுரை காணே!
மட்டவிழ் மாமலர் மாண்அடி யோயே!
திருவேங் கடவா! திருவடி சரணம். 4

அருபரம் நீஎன ஆற்றிடு மாப்போல்,
உருவமை திருவடி உட்புறம் அதனில்,
மங்களக் கோடுகள் மாண்புற இலகி,
தங்கள் எழிலிணைத் தாம்உரை செய்யும்;
அங்குசம், தாமரை, அணிஆர் ஆழி,
குடையொடு அமுதக் குடங்கள், குலிசம்,
கொடியொடு சங்கம், கொடுக்கும் கற்பகம்
என்னும் வடிவதில் எழுதிய போலும்!
என்னுடை அன்பே! எழுமலை யானே!
திருவேங் கடவா! திருவடி சரணம். 5

தாம்ரோதரத்யுதி பராஜித பத்மராகௌ
பாஹ்யையர் மஹோபிரபிபூத மஹேந்த்ர நீலௌ
உத்யந்நகாம்சுபிருதஸ்த சசாங்கபாஸௌ
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 6

ஸப்ரேமபீதி கமலாகர பல்லவாப்யாம்
ஸம்வாஹநேபி ஸபதி க்லம மாததாநௌ
காந்தாவவாங்மநஸகோசர ஸௌகுமார்யௌ
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 7.

லக்ஷ்மீ மஹீ ததநுரூப நிஜாநுபாவ
நீளாதி திவ்யமஹிஷீகர பல்லவாநாம்
ஆருண்ய ஸங்க்ரமணத: கில ஸாந்த்ரராகௌ
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 8

பதும நாபா! பாற்கடல் அணேவோய்!
பதுமக் கற்கள் பரப்புசெந் நிறத்தை,
உன்திரு அடியின் உட்புறச் செம்மை,
தன்திரு ஒளியால் தருக்கிடும் வெற்றி;
திருவடிப் புறத்தே திகழ்வுறும் கருமை,
கருமணி கக்கிடும் கார்நிறம் வெல்லும்;
வாள்உகிர் வெண்மை வாள்நிலா வீழ்த்தும்;
தாள்நிறத் தன்மைத் தரமிடல் ஆமோ?
திருவேங் கடவா! திருவடி சரணம். 6

அன்பொடு கமலையாள் அச்சம் அளாவி,
தன்திருக் கரமாம் தளிரால் வருட,
உன் திரு அடியும் உடனே வாடும்;
தன்திருத் தன்மை தரமிகு மென்மை;
உன்அரு ளல்லால் உரைத்திடப் போமோ?
திருவேங் வடவா! திருவடி சரணம். 7

நிலமகள், மலர்மகள், நீள்குண நேரார்,
வலமுடை நீளேஎன் வான்புகழ் மனேயர்,
கரமாம் தளிர்கொடு காதலாய் வருட,
வரம்தரும் வாள்அடி வனப்பாய்ச் சிவக்கும்;
திருவேங் கடவா! திருவடி சரணம். 8

நித்யா நமத்விதிசிவாதி கிரீட கோடி -
ப்ரத்யுப்ததீப்த நவரத்ந மஹ: ப்ரரோஹை:
நீராஜநாவிதிமுதாரம் உபாததாநௌ
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 9

விஷ்ணோ: பதே பரம இத்யுதிதப்ரசம்ஸௌ
யௌ மத்வ உத்ஸ இதி போக்யதயாப்யுபாத்தௌ
பூயஸ்ததேதி தவ பாணிதலப்ரதிஷ்டௌ
ஸ்ரீவேங்கடே சரணௌ சரணம் ப்ரபத்யே. 10

பார்த்தாய தத்ஸத்ருச ஸாரதிநா த்வயைவ
யௌ தர்சிதௌ ஸ்வசரணௌ சரணம் வ்ரஜேதி
பூயோபி மஹ்யமிஹ தௌ கரதர்சிதௌ தே
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 11

அரன்,அ யன் ஆதி அண்டக் குலத்தார்
வரன்மு றையாக வணங்குவர் நாளும்;
அவருடை முடிகளில் அணியுறும் ஒன்பான்
கவர்ஒளி மணிகள், கவின் உடை உன்தன்
அடியிணை தனக்கு,அம் கற்பூரம் காட்டும்;
திருவேங் கடவா! திருவடி சரணம். 9

விட்ணுவே பரம்பதப் பொருளென வேதம்
இட்டமாய் ஏத்தும்உன் இணைஆர் அடிகளை;
மறைமுடி, அதனையே மாந்தி மகிழும்;
அறைதற்கு அரியஉன் அறைகழல் அதுதான்,
அன்புடன் மீண்டும் அடியோம் காண,
அன்புடை வலக்கை அழகாய்ச் சுட்டிட,
திருவேங் கடம்தனில் திருநிலை கொள்ளும்;
திருவேங் கடவா! திருவடி சரணம். 10

பாரதப் போரில் பார்த்தனை உந்தும்
பார்த்தசா ரதியே! பண்பார் உரையால்,
'என்னையே நம்புவாய்! ஏதமே வாரா!
என்னையே சரண்அடை! ஏக்கம் கொள்ளேல்!'
என்னவே கூறி,உன் ஏருடைப் பாதம்
தன்னையே காட்டித் தஞ்சம் அளித்தாய்;
திருவேங் கடம்தனில் திருவடி தன்னை
இருவினை யேனும் எளிதாய்க் காண,
வலக்கரம் தாழ்த்தி வணங்குவான் வைத்தாய்!
திருவேங் கடவா! திருவடி சரணம். 11

மந்மூர்த்நி காளியபணே விகடாடவீஷு
ஸ்ரீவேங்கடாத்ரி சிகரே சிரஸி ச்ருதீநாம்
சித்தேப்யநந்யமநஸாம் ஸமமாஹிதௌ தே
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 12

அம்லாநஹ்ருஷ்யத் அவநீதலகீர்ண புஷ்பௌ
ஸ்ரீவேங்கடாத்ரிசிகரா பரணாயமானௌ
ஆநந்திதாகில மநோநயநௌ தவைதௌ
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 13

ப்ராய: ப்ரபந்ந ஜநதா ப்ரதமாவகாஹ்யௌ
மாது: ஸ்தநாவிவசிசோ: அம்ருதாயமாநௌ
ப்ராப்தௌபரஸ்பரதுலாம் அதுலாந்தரௌ தே
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 14

ஏழையன் ஏதலன் என்தன் தலைமிசை,
ஏழையாம் ஆயர்தம் ஏறதாய், காளியன்
பணிமுடித் தலைமிசை, பரலுடை முட்புதர்,
படர்கான் நெறிமிசை, பகர்மறைச் சிரமிசை,
தடவரை சூழ்உயர்த் திருமலை முடிமிசை,
சிறிதெனப் பெரிதெனச் சீர்வளர் உன்தன்
திருவடி தன்னால் தீண்டி மகிழ்ந்தாய்!
திருவேங் கடவா! திருவடி சரணம். 12
ஒழிதொரு தெய்வம் பேணார் மனமிசை,

வாடா மலராம்உன் வான்உயர் திருவடி,
நாடா வருவோர் நயந்து அருச்சிக்கும்
திருவுடை மலரைத் திறமாய்ச் சூடும்;
திருமலை தனக்குத் திருமுடி அணிஆம்;
அனைவர் கண்களின் ஆனந்தக் காட்சி;
அனைவர் மனத்தினின் ஆனந்த நிலயம்;
திருவேங் கடவா! திருவடி சரணம். 13

சரண்புகு வோர்தாம் சாலவே மூழ்கி,
அரண்என வே, தாம் ஆனந்தம் உறுவர்;
பசித்திடும் சேய்க்குப் பால்நினைந்து ஊட்டும்
கசிந்திடும் அன்புடை அன்னையின் மார்பாம்
அமுதார் கலசத்தின் ஆரமுது ஆகும்,
அமுதனே! ஒப்பில் அழகுஉமிழ் இணையடி;
திருவேங் கடவா! திருவடி சரணம். 14

ஸத்வோத்தரை: ஸதத ஸேவ்ய பதாம்புஜேந
ஸம்ஸார தாரக தயார்த்ர த்ருகஞ்சலேந
ஸௌம்யோபயந்த்ருமுநிநா மம தர்சிதௌதே
ஸ்ரீவேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே. 15

ஸ்ரீச ச்ரியா கடிகயா த்வதுபாயபாவே
ப்ராப்யே த்வயி ஸ்வயம் உபேயதயா ஸ்புரந்த்யா
நித்யாச்ரிதாய நிரவத்யகுணாய துப்யம்
ஸ்யாம் கிங்கரோ வ்ருஷகிரீச ந ஜாது மஹ்யம். 16

ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி முற்றிற்று.

நற்குணம் நிறைந்தோர் நாளும் வணங்கும்
சற்குணன்; தாமரைச் சரணுடை நாதன்;
மிளிர்ஆர் தேசுடை மணவாள மாமுனி
குளிர்ஆர் கடைக்கணால் குவலயம் வாழ,
பிறவிப் பெருங்கடல் தாண்டுபேர் அணைஎன,
மறைமுடி போற்றும் மாசறுபொருளாய்க்
காட்டிய, உன்னுடைக் கழலிணை எளியன்,
வாட்டம் இன்றியே வாழ்த்திடத் தாராய்!
திருவேங் கடவா! திருவடி சரணம். 15

திருவேங் கடவா! திருமகள் கேள்வா!
திருவாம் உன்தன் திருவுடைப் பிராட்டி,
அடைவழி நீஎனின் அணைப்பாள் உன்னுடன்;
அடைபயன் நீஎனின் அதுவே ஆவாள்;
இத்தகைத் திருவாள் என்றுமே அடையும்
எத்தகை மாசுமில் எழில்குண நலத்தோய்!
உனக்கே தொண்டன்ஆம் உறுதியும் பூண்டேன்;
எனக்கென ஏதும் எண்ணவே மாட்டேன்
திருவேங் கடவா! திருவடி சரணம். 16

திருவேங்கடவன் திருவடித்துதி முற்றிற்று.

ஸ்ரீ

# 4. ஸ்ரீ வேங்கடேச மங்களாசாஸனம்

ஸ்ரீரிய:காந்தாய கல்யாண
நிதயே நிதயேர்த்திநாம்
ஸ்ரீவேங்கடநிவாஸாய
ஸ்ரீநிவாஸாய மங்களம். 1

லக்ஷ்மீஸவிப்ரமாலோக
ஸுப்ரு விப்ரமசக்ஷுஷே
சக்ஷுஷேஸர்வலோகாநாம்
வேங்கடேசாய மங்களம். 2

ஸ்ரீவேங்கடாத்ரி ச்ருங்காக்ர
மங்களாபரணங்க்ரயே
மங்களாநாம் நிவாஸாய
வேங்கடேசாய மங்களம். 3

ஸர்வாவயவ ஸௌந்தர்ய
ஸம்பதா ஸர்வசேதஸாம்
ஸதா ஸம்மோஹநாயாஸ்து
வேங்கடேசாய மங்களம். 4

நித்யாய நிரவத்யாய
ஸத்யாநந்தசிதாத்மநே
ஸர்வாந்தராத்மநே ஸ்ரீமத்
வேங்கடேசாய மங்களம். 5

# 4. திருவேங்கடவன் மங்களவாழ்த்து

மலராள் மணாள! மங்கல வைப்பே!
நலமருள் நாயக! நாடுவோர் நிதியே!
திருவேங் கடம்தனில் திருப்பதி கொண்டோய்!
திருமகள் நிலய! தேவனே! மங்களம்! 1

திருமகள் காதலால் திளைத்து நோக்குறும்
திருவுற வளைந்த திருப்புரு வக்கணா!
அனைத்து உலகுக்கும் அருள்தரு கண்ணே!
அனைவரும் போற்றும் ஆனந்த வாழ்வே!
திருவேங் கடவா! தேவனே! மங்களம். 2

திருவேங் கடமலைத் திருமுடி தனக்குத்
திருவினைத் தந்திடும் தேசுடை அடியோய்!
மங்கள நிலையமே! மாமலை வாழ்வே!
திருவேங் கடவா! தேவனே! மங்களம். 3

அங்கம் அனைத்திலும் அழகொளிர் தேசால்,
மங்களம் வழங்கி, மாநிலம் அதனில்,
மக்கள் முழுமையும் மயங்கிடச் செய்வோய்!
திருவேங் கடவா! தேவனே! மங்களம்! 4

அழிவிலி! மறுவிலி! ஆனந்த உருவே!
அழிவிலா ஞானமே! அனைத்தின் உயிரே!
மேலவர் போற்றும் மெய்ப்பொருள் வடிவே!
திருவேங் கடவா! தேவனே! மங்களம்! 5

ஸ்வதஸ் ஸர்வவிதே ஸர்வ
சக்தயே ஸர்வசேஷிணே
ஸுலபாய ஸுசீலாய
வேங்கடேசாய மங்களம். 6

பரஸ்மை ப்ரஹ்மணே பூர்ண
காமாய பரமாத்மநே
ப்ரயுஞ்ஜே பரதத்வாய
வேங்கடேசாய மங்களம். 7

ஆகாலதத்வமச்ராந்தம்
ஆத்மநாமநுபச்யதாம்
அத்ருப்த்யம்ருதரூபாய
வேங்கடேசாய மங்களம். 8

ப்ராயஸ் ஸ்வசரணௌ பும்ஸாம்
சரண்யத்வேநபாணிநா
க்ருபயா திசதே ஸ்ரீமத்
வேங்கடேசாய மங்களம். 9

தயாம்ருத தரங்கிண்யா:
தரங்கைரிவ சீதலை:
அபாங்கை: ஸிஞ்சதே விச்வம்
வேங்கடேசாய மங்களம். 10

அனைத்தும் தானே அறிந்திடும் அறிவோய்!
அனைத்தும் வல்லாய்! அனைத்தின் தலைவா!
எளிமையின் ஏந்தால்! எளியவர் அன்பா!
திருவேங் கடவா! தேவனே! மங்களம். 6

அருபரம் பொருளே! அரும்பர மாத்மா!
கோருவ முழுமையும் கொண்டலின் பொழிவோய்!
அனைத்தும் நடாத்தும் அனைத்துஉயர் பொருளே!
திருவேங் கடவா! தேவனே! மங்களம் 7

காலக் கடைவரைச் சோர்விலாது ஏத்தும்
சால்புடைப் பத்தர் சாவுஇல் சீர்பெற
அப்பொழு தத்தவாம் ஆரா அமுதே!
திருவேங் கடவா! தேவனே! மங்களம். 8

மிகஎழில் கொழிக்கும் மின்னொளிர் இணையடி
மிகவாக் காட்டி, மின்நிலை மாந்தர்க்கு
"என்அடி சரண்அடை" என்னவே வலக்கை
தன்னால் வனப்பாய்த் தாள்நிலை சுட்டினோய்!
திருவேங் கடவா! தேவனே! மங்களம். 9

அருளார் கடலின் அமுதார் அலைகளால்
அருந்தண் கடைக்கணால் ஆரவே நனைப்போய்!
திருவேங் கடவா! தேவனே! மங்களம்! 10

ஸ்ரக்பூஷாம்பர ஹேதீநாம்
ஸுஷமாவஹ மூர்த்தயே
ஸர்வார்த்தி சமநாயாஸ்து
வேங்கடேசாய மங்களம். 11

ஸ்ரீவைகுண்ட விரக்தாய
ஸ்வாமிபுஷ்கரிணீ தடே
ரமயா ரமமாணாய
வேங்கடேசாய மங்களம். 12

ஸ்ரீமத் ஸுந்தர ஜாமாத்ரு
முநிமாநஸ வாஸிநே
ஸர்வலோக நிவாஸாய
ஸ்ரீநிவாஸய மங்களம். 13

மங்களாசாஸநபரை:
மதாசார்ய புரோகமை:
ஸர்வைஸ்ச பூர்வைராசார்யை:
ஸத்க்ருதாயாஸ்து மங்களம். 14

ஸ்ரீ வேங்கடேச மங்களாசாஸனம் முற்றிற்று.

நல்அணி நல்தொடை, நல்உடை, நற்படை
நல்எழில் தமக்கும், நல்எழில் நல்கும்
நல்எழில் வடிவோய்! நானிலப் புகலே!
அனைவர் துயரையும் அகற்றும் அரசே!
திருவேங் கடவா! தேவனே! மங்களம். 11

பரமாம் பதத்தின் பற்றையும் துறந்தோய்!
பரமாம் இறைபுட் கரணியின் பாங்கர்
திருமகள் தன்னொடும் திளைத்து மகிழ்வோய்!
திருமலை தன்னில் திருப்பதி கொள்வோய்!
திருவேங் கடவா! தேவனே! மங்களம்! 12

மணவாள மாமுனி மாண்புசால் மனத்தில்,
கணமுமே மறவாக் காதலர் நெஞ்சில்,
எப்பொழு தும்உறை எழில்ஆர் உருவோய்!
எப்பொருள் தன்னிலும் உட்பொருள் ஆவோய்!
திருவேங் கடவா! தேவனே! மங்களம்! 13

மங்களம் இசைப்போர், எங்கள்நல் ஆசான்,
பொங்கும்-இந் நூலாம் பொருளினைத் தந்தோன்
முனைவராய் முகிழ்த்த முந்தையா சிரியர்
அனைவரும் ஏத்தும் அருளுடைத் தேவே!
திருவேங் கடவா! தேவனே! மங்களம். 14

திருவேங்கடவன் மங்கள வாழ்த்து முற்றிற்று.

உ

ஸ்ரீ ராமஜெயம்




# நன்றி

திருவேங்கடமுடையானுக்கு,

ஆளாக்கிய அழகப்ப வள்ளலுக்கு,

ஆக்கமும் ஊக்கமும் அளித்த
அறிஞர்கள், ஆசிரியர்கள்
ஆகியோருக்கு,

பலவாறு உதவியாயிருந்த
நண்பர் இராம. இராமனுதன்
அவர்கட்கு,

மிக விரைவில் நூலை அச்சேற்றி
உதவிய திருமகள் அச்சகம்,
திரு. நா. பழநியப்பன்
அவர்கட்கு.

காரைக்குடி 3
19—9—70

ரா. பத்மநாபன்